*Houses for Harijans in Tanjore district*

* 382 *Q.*—Sri M. C. MUTHUKUMARASWAMY : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லாவில் 1956–57, 1957–58-ல் ஹரிஜனங்களுக்காக எத்தனை வீடுகள் கட்டிக் கொடுக்கப்பட்டன ;

(ஆ) அதற்காக செலவிடப்பட்ட தொகை எவ்வளவு ?

The Hon. Sri P. KAKKAN :

(*a*) 1956–57 ... 229 houses.
1957–58 ... 234 houses.

(*b*) 1956–57 ... Rs. 1,25,139–11–0.
1957–58 ... Rs. 1,28,280.

Sri M. C. MUTHUKUMARASWAMY : ஸார், ஹரிஜனங்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கும் இந்த திட்டம், ஹரிஜனங்களுக்கு சலுகை அளிக்கப்பட்டிருக்கிற 10 வருஷ காலத்தில், கடைசிக் காலத்தில் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. அதோடு தெருவிற்கு 20 வீடுகள் கட்டுவது என்று திட்டம் இருப்பதை, தெருவிற்கு 50 வீடுகள் கட்டுவது என்று திட்டம் போடுவார்களா ? அல்லது இந்தச் சலுகையை 25 வருஷங்கள் நீடிக்க வேண்டுமென்று சிபார்சு செய்வார்களா ?

The Hon. Sri P. KAKKAN : 20 வீடுகள்தான் கட்டுவதற்கு திட்டம் இருக்கிறது என்று சொல்வது சரியல்ல. குறைந்தது 20 வீடுகள், அதிகப்படி 30 வீடுகள். 50 வீடுகள் கட்டுவதானால் பணம் ஜாஸ்தி வேண்டும். அதைப் பரிசீலனை செய்துதான் பார்க்கவேண்டும்.

Sri P. JAYARAJ : ஹரிஜனங்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கும் போது அவர்கள் பங்கு கொடுக்கவேண்டுமென்றிருப்பதால், அவர்கள் பங்கு கொடுத்து வீடு கட்டிக்கொள்ள வசதியில்லாமல் இருக்கிறார்கள். இந்தப் பங்குத் தொகையில்லாமல் கட்டிக்கொடுக்க அரசாங்கம் முன் வருமா ?

The Hon. Sri P. KAKKAN : பூராவையும் இலவசமாகக் கொடுக்க முடியாது. கொஞ்சம் வேண்டுமானால் கடனைக் கொடுக்கலாம்.

*Political prisoners*

* 383 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state the number of " Political " prisoners released on parole so far this year?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : The answer is four.

Sri N. K. PALANISAMI : அரசியல் கைதிகளில் பல பேருக்கு 40 வருஷங்கள், 50 வருஷங்கள் தண்டனை கொடுக்கப்பட்டிருக்கிறது. பரோலில் எல்லோரையும் விட ஏற்பாடு செய்வார்களா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : 40 வருஷம், 50 வருஷம் தண்டனை கொடுத்திருக்கிற விவரங்கள் என்னிடம் இல்லை. அரசியல் கைதிகள் மட்டுமல்ல, எல்லோருக்குமே பரோல் கொடுக்கப்படுகிறது. ஆனால் தகுந்த காரணங்கள் வேண்டும். அதாவது குடும்பத்தில் ஏதாவது கஷ்டங்கள் முதலியவை ஏற்பட்டால் இந்த பரோல் கொடுத்து வருகிறோம்.